உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சங்கங்களின் பயன்.

மேல் நாட்டார் பெரிய காரியங்கள் முதற் சிறிய காரியங்கள் வரையில் ஒவ்வொரு காரியத்திற்கும் தங்கள் தங்களுக்குள் ஒரு சங்கமுண்டாக்கி அதைமிக்க அபிமானித்து வளர்த்து அதற்குக் கட்டுப்பட்டு நடந்து அதனால் நல்ல பிரயோஜனங்களை அடைந்து வருகிறார்கள். அவர்களுள் வியாபாரிகள் தொழிலாளிகள் விவசாயிகள் வக்கீல்கள் உபாத்தியாயர்கள் பத்திராதிபர்கள் வேலையாட்கள் இன்னும் ஒவ்வொரு வகுப்பாரும் தனித்தனி தங்கட்குள் சங்க மேற்படுத்தி ஆலோசனைப்படி எதையும் செய்து கட்டுப்பாடோடு நடந்து வருவதால் அவர்கள் எந்த விஷயத்திலும் பெருமையும் இலாபமும் பெற்று வருகிறார்கள். அவர்கள் சங்கங்களையும் அதிற்பேசப்படுகிற விஷயங் களையும் அலட்சியம் செய்யாமல் நல்ல மதிப்பு வைத்து நடப்பதால் அவைகள் மிகுந்த சிறப்பையும் கௌரவத்தையும் பெற்று நீண்ட ஆயுளோடு நடைபெறுகின்றன. நமது சங்கங்களோ ஸ்தாபிக்கப் பெறுவதும் பேசுவதுமன்றி அவர்களைப்போல் மதிப்பு வைப்பதும் அதன் ஆலோசனைக்கிணங்க நடப்பதுமில்லையென்று சொல்லக்கூடும். அப்படி நடைபெறுவதில் அதிக நன்மைபெற முடியாது. முக்கியமாக இப்போது நமது நாட்டுச்சங்கங்கள் கல்வி சம்பந்தமாகவும் மதசம்பந்தமாகவும் ஆசாரசம்பந்தமாகவும் ஏற்பட்டு நடைபெறுகின்றன. முதற்படியில் இத்தகைய விஷயங்களே உபயோகமானவை யென்பதிலையமில்லை.

ஒருவன் தன் வாழ்நாளை இனிமையாக்கிக்கொள்ள விரும்பின் கல்வி கற்று அறிவைப் பெறுதல் வேண்டும். கல்வியாற் பெறுதலானும் கேள்வியான் அறிவைப் பெறுதல் மிகவெளிது. எப்பொழுதும் கற்றலைவிடக் கேட்டலே நன்று என்பர் பெரியார். இமமட்டோ, ஞனசாத்திரங்களும் கற்றலென்னாது கேட்டல் எனவே கூறும். ஏனெனின் சொல்பவர்கள் சொல்லும் பொருட்களை முன்னமே ஆராய்ந்து சீர்படுத்தி வைத்திருப்பாராதலின் இப்பெருநன்மை சங்கமொன்றினாலேயே கிடைக்கற்பாலது. ஒருவன் தனியேயிருந்து எல்லா நூல்களையுங்கற்று அறிவைப் பெறுதெலன்பது இயலாத காரியம். பலநூல்கள் கற்றுணர்ந்த பல்லோர் குழுமிய சங்கத்தின்கண்பலரும் தாம் தாம் கற்ற நூற்கட் பொதிந்த நுண்ணிய பொருள்களை எடுத்துக் காட்டி இனிது விளக்குவர். அதனால், பல நூல்கள் பயின்று பெற) அறிவு ஒருவனுக்கு சங்கத்தாற் கிடைக்கின்றது. லின் தக்கவாறு கல்வி கல்லா தவரும் சங்கமெய்துவரேல் சாற்றரும் பயன் பல சாலவெய்துவ ரென்பது திண்ணம். இனிக்கற்றவர்களோ தாங்கள் கற்ற நூற்பொருள்களைப் பிறர்க்கு எடுத்துக்கூறுவதனால்ஐயம கன்று மேன்மேலும் பேரறிவு கிடைக்கப் பெறுகின்றார்கள். இன்னும் தாங்களறியாத மர்மங்களையும் அறிந்து கொள்ளுகின்றார்கள்.

இங்ஙனம் கற்றவர் கல்லாதவர் என்னும் இருதரத்தாருக்கும் பன்முகத்தானும் நன்மை பயப்பது பங்கமகற்றும் சங்கமே என்க. கற்றுத் தேர்ந்த புலவர்களையும் குற்றந்தீர்ந்த பெரியோர்களையும் அகப்படுத்துதற்குச் சங்கமே தகுந்தவலையாம். இத்தகைய சங்கங்களில் எவ்வளவோ அரிய பெரிய பொருள்கள் வெளிப்படுத்தப் பெறும். அவையனைத்தும் கற்றுப் பயன் பெறலாம். கற்றாரை நோக்கி மேன் மேலும் கற்க முயலலாம். அங்கு உபந்யாசிக்கும் பல விடயங்களைக் குறித்தும் பல நூல்கள் விரைந்து பார்க்க வேட்கையுண்டாகும். இவைகளினால் சங்கத்திற் சேர்ந்த ஒருவன் ஒரு புலவனாய் விடுவனென்று சொல்லலாம். ஆனது பற்றியே "கண்டதுகற்கப் பண்டிதனா வான்' என்னும் முதுமொழி எழுந்தது. மேலும் சங்கத்தில் பலவிடயங்களைப் பற்றி வாதம் செய்வதனால் வாக்கு வல்லமை ஆக்கம் பெறு கின்றது. வாக்கு வல்ல மையின் சிறப்பை வழுத்தவும் வேண்டுமோ?.

'சொலன் வல்லன் சோர்விலனஞ் சானவனை
யிகல் வெல்லல் யார்க்கு மரிது'

என்ற பொய்யா மோழியே அதனை நன்கு விளக்கும். கல்வியை ஆராய்ந்தறிந்தும் கேட்போருக்குப் பொருள் விளங்கச் சொல்லும் சொல்லின் வல்லமை ஒருவற்கில்லையெனின் அக்கல்வி என்ன பயன்படும். அச்சொல்வன்மையு முளதாயின் பொற்பூ மண முடையது போலும் என்பர் ஆன்றோர். இத்துணைச் சிறந்த வர்க்கு வல்லமையைச் சங்கமொன்றே தருந்திறத்தது...

இன்னும் காரியங்களைச் சீர்தூக்கித் தீர்மானிக்கும் திறனும் சங்கத்தின் சட்டதிட்டங் களுக்குட்பட்டு நடப்பதினால் நம்மையே நாம் பாதுகாத்துக் கொள்ளும் தன்மையும் சபைத்தலைவர் காரியதரிசி முதலிய வேலைகள் பார்ப்பதனால் நமக்கேற்பட்ட வேலைகளை நாமே முட்டின்றி முடிக்கும் பொறுப்பும் பிறரையாளுந்திறனும் இவை போல்வனவும் பிறவும் நமக்குண்டாகின்றன. பல பெயர்கள் ஒன்று சேர்ந்து அளவளாவுதலால் அன்பு ஒற்றுமை நல்லொழுக்க முதலிய வற்றை நாமடைகின்றோம். இவை நம் வாழ்நாளை எவ்வளவு செவ் வைப்படுத்து மென்பதை ஊகித்துணருங்கள். கண்ணுதற் பெருங் கடவுளே கழகமோடமர்ந்து தமிழாராய்ந்தனரெனின் சங்கத்தின் பெருமையைச் சாற்றுவதெங்கன்? ஆதலின் அறிவைப்பெருக்கி அளவற்ற நன்மைகளை விளைவிக்கும் சங்கங்களில் ஒவ்வொருவரும் சேர்ந்து உழைத்தல் வேண்டும். அச்சங்கங்கள் தளர்வுறாது என்றும் நின்று நிலவுமாறு எல்லாம்வல்ல இறைவன் கிருபை பாலிப்பாராக.

நண்பர்களே! யானிதுகாறுங் கூறியவற்றைத் தொகுத்துச் சொல்லுமிடத்துச் சங்கம் இருவகைப்படு மென்பதூஉம்; பலர்கூடிச் செய்கிற காரியம் பெரிதும் நலம்பயக்கு மென்பதுஉம், அறிஞர்கள் பலர் அளவளாவிக்களிப்பதிலும் சுவர்க்க அனுபவம் சிறந்த தன்று என்பதுஉம், சங்கங்கள் கூடுவது தொன்று தொட்ட வழக்கம் என்பதூஉம், கற்றலை விடக் கேட்பதே மேல் என்பதூஉம், கற்றவர்களும்

கல்லாதவர்களும் கங்கத்தால் விசேட நன்மையை அடைவார்களென்பதூஉம், ஒவ்வொருவரும் இதற்காக உழைத்தல் வேண்டும் என்பதுஉம் பிறவும் ஒருவாறு விளக்கப்பட்ட பொருள்களாம்.

சுபம்.

பொ. மாணிக்கம்,
தாதம்பேட்டைப் பழூர்.

சித்தாந்தம் - 1915 ஆ - ஆகஸ்டு மீ